175. என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணேன்
நன்னிலந் தனிலே ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னானே னுத் தரீயத்தை வீசு கின்றேன்
தன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன்.

---

தையு மிப்போது சற்குருவின் கிருபாவிசேஷத்தாலே கானற்சலம் போல மித்தையாகக்கண்டு, பிரத்தியகபின்ன பிரஹ்மமாகிய வென்னையே நானென வுள்ளவாறு நம்பி யுய்ந்தனன்; அந்நிலை சித்தித் தற் பொருட்டு, 174

கீழ்ச்சென்ற ஜன்மங்களில் யான் எப்படிப்பட்ட மேலான ¶புண்ணிய கருமங்களைச் செய்தேனோ? அவற்றை யறியேன்; அஃது எப்பாக்கிய (அதிருஷ்ட) விசேஷத்தால் சித்தித்ததோ? அதனையும் அறியேன். நன்னிலமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தி லெழுந்தருளி யிருந்த நாராயண தேசிகரது கிருபா விசேஷத்தாலே நான் தன்னிய (கிருதார்த்த) னானேன்; அதனாலுண்டான * பரமாநந்தத்தால் மேலாடையை ஆகாயத்தி லெறிந்து விளையாடுகின்றேன்; தன்னியனான நான் இன்னு மாநந்தக்கூத் தாடுகின்றேன். 175

---

¶ புண்ணியம் சுருதி-ஸ்மிருதி முதலியன கூறும் யாகம் முதலிய விகித கருமங்களாம். அவை தம்மைச் செய்பவர்க்கு அதிர்ஷ்டத்தை (தருமத்தை) யுண்டாக்குவது வாயிலாகச் சுவர்க்காதிலோக போகங்களை யடையும் பயனைத் தருவனவாம். இக்கருமங்கள் தம்மைப் பயனோக்கிச் செய்பவர்க்குச் சுவர்க்காதி லோக போக வடிவப் பயனைத் தருவனவாயும், பயனோக்காது செய்பவர்க்குச் சித்த சுத்தி வடிவப் பயனைத் தருவனவாயு மிருக்கின்றன வென்பதிங் குணர்தற்பாலதாம்.

*“ வில்லாள ரானோர்க் கெல்லா மேலவன் விளித லோடுஞ்
செல்லாதவ் விலங்கை வேந்தற் காசெனக் களித்த தேவர்
எல்லாருந் தூசு நீக்கி யேறிட வார்த்த போது
கொல்லாத விரதத் தோர்தங் கடவுளர் கூட்ட மொத்தார் ”

**என்று கம்பராமாயணம்** யுத்தகாண்டம் இந்திரசித்து வதைப் படலத் துள்ள **செய்யுளிங் குணர்தற்பாலதாம்.**

176. தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்
நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனு லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.

177. வந்ததோ ரிவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேங்கி
அந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே.

---

தனது தாய்தந்தையரை வியந்து துதித்தல்.

† *எனது தாயுந் தந்தையும் யான் தத்துவஞானத்தா லுதயமான வித்தியாநந்தத்தின் மிகுதியா லெப்போது மாநந்தக் கூத்தாடுவே னென்னும் நிச்சயத்தை யான் பிறந்தவன்றே தெரிந்த வுண்மையாலன்றோ என்னைத் தாண்டவாவென் றழைத்தனர்; அதனால், அவர்கள் மிகவும் மகிமையுள்ளோ ராவர்.* 176

தனது நிரதிசயாநந்தம் வெளியாதற் கேதுவாய்,
சற்குருவாகவுஞ் சாஸ்திரமாகவு மிருந்த ஈசனை வியந்து வணங்கல்.

*தத்துவஞானத்தா லுண்டானதாகிய இவ் வித்தியாநந்தத்தின் பெருக்கை யான் எவரிடத்திற் கூறுவேன்; (அஃதொருவரிடத்துங் கூறுவதற் கியையாததா யிருக்கின்றது). அவ் வித்தியாநந்தம் சத்துவ குணத்தால் வைராக்கிய மயமான அந்தக்கரணத்தின் சாந்த விருத்தியினின்றுந் தோன்றி மேலிட்டுப் பிரபஞ்சமுற்றும் வியாபித்துப் பூரணமாய் முடிவற்றதாயிற்று. அவ்வாறு நிரதிசயா நந்தமெனக் குண்டாகுமாறு குருவாகவும் வேதாந்த சாஸ்திரமாகவு மிருந் தருள்செய்த பரமேசுவரனது பங்கயப் பாதங்களை வணங்குகின்றே னென்று கூறினான்.* 177

---

† *"சச்சிதா நந்தமெனத் தாய்தந் தையரிட்டார், அச்சிதனை யேற்குமெனு மாரணங்கள் - மெச்சுகுரு, காட்டினு னென்னிடத்திற் கண்டே னதுவாக, நாட்டுமிதி லார்பெரியர் நாடு"*

**என்று திருக்குத் திருசிய விவேகங் கூறுவதறிக.**

178. வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னோமே
பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே.

179. ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதும்
காரணங் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் கனவில் வந்தே.

---

இந் நூற்பயன் கூறல்.

† வித்யாநந்தம் துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியம், பிராப்தப் பிராப்பியமென்னு மிந்நான்கு வகைத்தாமென்றதனை யிதுகாறுங் கூறினோம். இனிக் கூறத்தக்கது யாதொன்று மில்லையாம். அன்புடன் கைவல்லிய நவநீதமென்னு மிந்நூலினைச் சற்குருவை யடைந்து அவர் வாயிலாகக் கேட்டாராய்ந்து தமது நிஜவடிவத்தை யுள்ளவாறறிந்தவர் நிஷ்காம புண்ணியகரும விசேஷத்தாலே ‡ நிஷ்டைகூடி அது வாயிலாகத் தமதுண்மைநிலையைப் பிறழாதறிந்து அதனால் ¶ நித்தியமாயுள்ள ஜீவன் முத்தியை முன்னர்ப் பெற்றிருந்த § முனிசிரேட்டராவர். 178

குருநாதனருளால் இந்நூல் யாதொரு குறைவுமின்றி முற்றுப் பெற்றதெனல்.

வேதார்த்தமான சாதன சதுஷ்டய முதல் வித்தியாநந்த பரியந்த மதிகாரிக்குச் செவ்வையாக விளங்கு நிமித்தம் எடுத்துக் கூற வேண்டுங் காரணங்களுள் யாதொன்றுங் குறைவுபடாவாறு கைவல்லிய நவநீதமென்னு மிந்நூலைப் பூரணமாக்க விரும்பி, நன்னிலமென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தி லெழுந்தருளி யிருந்த நாராயண தேசிகர் எனக்குச் சொப்பனத்திற் றோன்றிக் கூறவேண்டுவன வனைத்தையும் இந்நூல் முற்றுப்பெறு மளவும் கூறியருளினர். (அவ்வாறவர் கூறியருளினமையால், இது முற்றுப் பெற்றதேயன்றி யெனது கல்வி கேள்விகளாலாய அறிவால் முற்றுப் பெறவில்லையாம்). 179

---

† "அரியமறை முடிவாகும் வாக்கியஞா னத்தா லாதலது வித்தியா நந்தமென வறிக" என்றும், "தக்கமா ஞானபல நான்கு துக்கா பாவஞ் சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே,தொக்க பிராப்திப் பிராப்பியங்கள்" என்றும் வேதாந்த சூளாமணி கூறுவதறிக.

‡ மன மசையாது சொரூபத்தில் நிற்றல் நிஷ்டையாம்.

¶ அஸ்தபூஷண நியாயம்போல முன்னமே பெறப்பட்டு நாசமின்றி யிருப்பதாகலின், சீவன்முத்தி நித்தியமா யிருப்பதாமென்க.

§ மனன சீலன் - முனி.

180. குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற் கொண்டார்
உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல
நலமெய் யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞான நூல்கள் படித்தஞா னிகளாய் வாழ்வார்.

---

இந்நூலைக் கற்றறிந்தோர் ஞானசாஸ்திரம் பலவற்றையுங் கற்றறிந்தோராவரெனத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்.

† சற்குருவின் திருவடியி லபிஷேகஞ்செய்த தீர்த்தத்தைத் தமது சிரசில் புரோட்சித்து (தெளித்து)க் கொண்டவர் அதனால் கங்கை முதலிய புண்ணிய தீர்த்தமனைத்திலுஞ் சென்று மூழ்கினோரடையும் பயனெல்லா மடைவர்; அதுபோல, கைவல்லிய நவநீத மென்னு மிந்த மெய்ஞ்ஞான சாஸ்திரத்தைச் சற்குரு வாயிலாக வரலாற்று முறையாகக் கற்றறிந்தவர் * ஞானசாஸ்திரம் பலவற்றினையும் படித் துணர்ந்த ஞானிகளைப்போலச் சிறப்புற்று வாழ்வர். 180

---

† "நரன் குருவின் பாதோதகத்தை (திருவடி யபிஷேக ஜலத்தை)ப் பருகி, மிஞ்சியதைச் சிரத்திற் றெளித்துக்கொண்டு, அதனால் தீர்த்தமனைத் திலும் மூழ்கியதன் பயனை யடைகின்றான்." என்று குருகீதை முதலத்தி யாயங் கூறுவதும்,

"தீர்த்தம் பிரசாதந் திருநீறஞ் சக்கரமும், சாற்றுமிறை கட்டிறந்த தாழ்வடமும் போற்றும், குருலிங்க சங்கமமுங் கொள்குறிக ளெட்டாங், கருவகலக் கட்டுரைத்தேங் காண்" என்று சிவஞானப் பிரகாச வெண்பா கூறுவதும்,

"ஓதிய பரம யோகி யுண்டதெவ் வுலக முண்ட, தாதலா லவனைப் பூசித் தவனுல கங்கண் மூன்றும், கோதிலாச் சிவன்மா லோடுங் கூடவே குறைவில் பூசை, காதலாற் செய்தா னென்றே யருளினான் கருணை வாரி" என்று சிவஞானநிலயங் கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம்.

* இங்ஙனங் கூறினமையால், இதனைக் கற்றறிந்தவர் ஞானசாஸ்திரம் பலவற்றையும் பிறர்க் கோதுவிப்பதற் காசிரியராவரென்பது பெறப்பட்டது; படவே, இந்நூ லின்றியமையாது கற்கத்தக்கதா மென்பதாயிற்று.

## இரண்டாவது சந்தேகந் தெளிதற்படலம்

முற்றிற்று.

---

கைவல்லிய நவநீதத்தின்
தத்துவ விளக்கப் படலம் பாயிரம் உட்படச் செய்யுள் 108;
சந்தேகந் தெளிதற் படலம் செய்யுள் 180;
ஆகச்செய்யுள் 288-ஆம்.

---

கைவல்லிய நவநீத வசன வினா விடை
விரிவுரையுடன்
முற்றுப் பெற்றது.

ஓம்

*தத்சத்*

*பரப்பிரஹ்மணே நம:*

## கைவல்லிய நவநீத நூலாசிரியரது மாணாக்கரு ளொருவர் அவரையும், அந்நூலையும் வியந்து துதித்தல்.

1. *அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்றாய்*
*எண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன*
*நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே*
*கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றண்ட வேசன்.*

*அண்ணல் - நாராயண தேசிகர்; இலக்கியார்த்தம் - தத்துவம் பதங்களின் இலட்சியார்த்தமாய கூடஸ்தப் பிரஹ்மம்; நாதத்தினுபாதி - மாயா காரியம்; கண்ணதாய் - அறிவாய்.*

2. *ஆன்ற பதமா மூன்றற்கு மதுநீ யானா யெனும்பொருளிற்*
*சான்ற துரியா தீதத்திற் றடையற் றிலங்கொண் சைதந்நியம்*
*ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூடறுத்*
*தோன்றித் தானே தானாவர் துலங்குந் தமக்கே சுவாநுபவம். [துத்*

*பதமாமூன்று - தத்துவமசி; துரியாதீதம் - துரியாதீத மென்னும் ஏழாவது ஞானபூமி; தடை - மறைப்பு; விகற்பமயக்கு - பேதப் பிராந்தி; தடை - பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப்பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தம்; சுவாநுபவம் - ஆத்மாநுபவம்.*

3. *என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தி யாநந்தம்*
*சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்றோர்*
*இன்ன மாணாக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே*
*துன்னி நிறைந்து நின்றோர்க டூய முத்த ராகுவரே.*

*துகளற்றோர் - பாவமற்றவராவர்; பதத்து - ஆத்மாவும் பிரஹ்மமு மொன்றே யென்னும் நிச்சயத்தில்; தூயமுத்தர் - சீவன்முத்தர்.*

4. *தத்துவ விளக்கந் தானுஞ் சந்தேகந் தெளித லாலும்*
*ஒத்திருள் விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கும்*
*சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்*
*புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்டான்.*

*இருள் - சந்தேகவிபரீதம்; மாயாவுள்ளிருள் - மாயையென்னுஞ் சொரூபாவரணம்; விருத்திபேதப்புத்தியால் - பலதலைப்பட்டு விரிந்த புத்தி விருத்தியால்; புரையற - குற்றமற.*

5. ஆண்டதே சிகளு மைய ஞரண னநந்தன் பாதம்
பூண்டவா ரோபத் தான்முன் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளோக்கத் தென்றும்
காண்டிட வைத்த ளிந்த காரணு போற்றி போற்றி.

நாரண னநந்தன் - நாராயண னென்னு முடிவற்றவன்; அ(வ்)வாரோபத்தால் - அவ்வத்தியாசத்தால் (காரணஞ்ஞானத்தால்); பொய்ம்மயக் காய்வந் தத்தை - மித்தையாய்த் தோன்றிய பிரபஞ்சத்தை; மாண்ட - சிறந்த; மாய்த்து - கெடுத்து; அருளோக்கத்து - கிருபாநோக்கத்தால்; காண்டிட - காண; போற்றி போற்றி - நமஸ்காரம் நமஸ்காரம்.

---

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடிவாழ்க.

---

